18th March 1959] [Mr. Speaker]

6. Srimathi K. Kolanthai Ammal.
7. Sri V. K. Kothandaraman.
8. ,, A. R. Marimuthu.
9. ,, K. K. Muthiah.
10. ,, C. R. Ramaswami.
11. ,, S. Ramakrishna Thevar.
12. ,, T. Sivagnanam Pillai.
13. ,, V. Subbiah.
14. Srimathi A. Suares.
15. Sri A. Vedarathnam Pillai.

As the number of candidates validly nominated is equal to the number of vacancies to be filled, namely, fifteen, I hereby declare them to have been duly elected to the Committee of Privileges for the year 1959–60. The Deputy Speaker is a Member ex-officio of the Committee.

I will announce the name of the Chairman of the Committee to-morrow.

I have received notice of a privilege motion from Sri R. Srinivasa Iyer regarding the publication of a news item, a report of his speech, in the "Madras Mail", as incorrect. I shall have the matter examined and give my ruling tomorrow.

## III—CALLING ATTENTION TO LARGE SCALE UNEMPLOYMENT AMONG SALT MANUFACTURERS IN ARUMUGANERI.

**Mr. SPEAKER** : The hon. Member Sri Selvarajan may move the motion given notice of by him under rule 40.

* **Sri M. S. SELVARAJAN** : கனம் சபாநாயகர் அவர்களே, தாரங்கதாரா கெமிகல் வொர்க்ஸ் திருச்செந்தூர் தாலுக்கா ஆறுமுக நேரியை அடுத்து வேலை துவங்கி நடந்து வருகிறது. அந்தக் கம்பெனி உப்பு உற்பத்தி செய்வதற்கும், கட்டிடங்கள் கட்டிக் கொள்வதற்காகவும் வேண்டி ஏறத்தாழ 3 ஆயிரம் ஏக்கரா நிலம் பட்டாதார்களிடமிருந்து ஆர்ஜிதம் செய்யப்பட்டது. அல்லது சர்க்கார் நிலத்தை இதுகாறும் யார் அநுபவித்துக்கொண்டிருந்தார்களோ அவர்களிடமிருந்து திருப்பி எடுத்துக் கொள்ளப்பட்டு அவர்களுக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. சமீப காலத்திலேயே உற்பத்தியைத் தொடங்கக்கூடிய நிலைமையில் இன்றைக்கு அந்தக் கம்பெனி வேலை வளர்ந்து இருக்கிறது. அந்த இடத்தில் பல வருஷங்களாக உப்பு உற்பத்தி செய்து கொண்டிருந்தவர்கள் எல்லாம்—அவர்களுடைய பட்டா நிலங்களில் இருந்தும், சர்க்கார் நிலங்களில் இருந்தும்—நில ஆர்ஜிதம் செய்யும்போது வேலை இழந்துவிட்டார்கள். ஆனால் அது வரையில் அவர்கள் தங்கள் உடமைகளை எல்லாம் கூடச் செலவழித்து அந்த நிலங்களில் உப்பு உற்பத்தி செய்து ஜீவனம் செய்து வந்தார்கள். இப்படி இந்த நிலங்களையே நம்பிக்கொண்டிருந்தது பல குடும்பங்கள். அந்த நிலைமையில் இந்த தாரங்கதாரா கெமிகல் வொர்க்ஸ்க்காக அந்த இடங்களை எல்லாம் எடுத்துக் கொண்டபோது பல நூற்றுக்கணக்கான குடும்பங்கள் வேலை இழக்கக்கூடிய நிலைமை ஏற்பட்டது. ஆனால் அப்போது அந்த இடங்களில் ஏற்கெனவே வேலையில் இருந்து வந்தவர்களுக்கு, தகுதி உள்ளவர்களுக்கு இந்த தாரங்கதாரா கெமிகல் வொர்க்

லையில் வேலை கொடுப்பதாக உறுதிமொழி அந்தக் கம்பெனியாரால் கலெக்டருக்குக் கொடுக்கப்பட்டிருப்பதாகத் தெரிகிறது. ஆனால் இதைத் தொடங்குவதற்கு ஆரம்ப வேலைகள் பல செய்யப்பட்டபோதும்கூட மலபார் போன்ற பகுதிகளில் இருந்து அல்லது சென்னைப்பட்டணத்திலிருந்து பெரிய கம்பெனிகளுக்கு காண்டிராக்ட் கொடுக்கப்பட்டுவிட்டதன் காரணமாக அவர்கள் அவர்கள் ஆட்களைக் கொண்டு வேலையைச் செய்தார்கள். அதன் காரணமாக அந்தப் பிரதேசத்தில் முன்பு வேலை செய்து வந்தவர்களுக்கு, தகுதி வாய்ந்தவர்களுக்கு—அந்த ஜில்லாக்காரர்களுக்கு வேலை கொடுக்க முடியவில்லை. அந்தப் பகுதியை அடுத்து இருந்தவர்களுக்கு வேலை வாய்ப்பு மிகச் சொற்பம். மேலும் அங்கே ஏற்கனவே உப்புத் தொழில் செய்து ஜீவனம் செய்தவர்களுக்கு அறவே வேலை இல்லை என்று சொல்லக்கூடிய அளவுக்கு மிகவும் வேலைவாய்ப்பு குறைந்திருக்கிறது.

இந்த நிலையில் கம்பெனியின் ஆரம்பக் கட்ட வேலைகள் எல்லாம் பூர்த்தியாகி உற்பத்தி வேலை—ஏப்ரல் மாத வாக்கில்—ப்ரொடக்ஷன் வேலை தொடங்க இருக்கிறது.

MR. SPEAKER : **The hon. Member must be brief.**

**SRI M. S. SELVARAJAN : Yes Sir,** ப்ரொடக்ஷன் வேலை தொடங்கி நடக்கப்போகிற காலத்திலாவது—முன்பு அந்த நிலங்களையே நம்பி ஜீவனம் செய்து வந்த குடும்பத்தினர்களுக்குப் போதுமான வேலை—சர்க்காரும் அந்தக் கம்பெனியில் ஒரு பங்குதார் என்ற முறையில் டைரெக்டர் போர்டில் இடம் பெறும் ஆதலால்—கிடைப்பதற்கு வேண்டிய வழி வகைகளைச் செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

அதோடு பட்டா நிலங்களை இந்தக் கம்பெனிக்காகக் கொடுத்தவர்களுக்கு நஷ்ட ஈடு கொடுக்கும்போது, சர்க்கார் நிலங்களில் இருந்து வெளியேற்றப்பட்டவர்களுக்கு எக்ஸ்ரேஷியாவாக ஏக்கருக்கு 300 ரூபாய் முன்பு கொடுக்கப்போவதாகச் சொல்லப்பட்டது. இப்போது அந்தத் தொகையிலும்கூட 50 சத வீதம் கடனாகவும், பாக்கி 50 சதவீதம் இனாமாகவும் கொடுக்கப்போவதாக நினைக்கக்கூடிய நிலைமை இன்று ஏற்பட்டிருக்கிறது. அப்படி இல்லாமல் அந்தத் தொகை முழுமையையும் இனாமாக அவர்களுக்குக் கொடுக்கப்படுவதோடுகூட, அந்த நிலத்திலிருந்து வெளியேற்றப்பட்ட காரணத்தினால் வேலை வாய்ப்பை இழந்து கண் கலங்கி இருக்கக் கூடியவர்களுக்கு—அந்தக் கம்பெனி ப்ரொடெக்ஷன் ஆரம்பிக்கும் போதாவது தகுந்த வேலை கொடுக்கக்கூடிய வழி வகைகளைச் செய்ய வேண்டும். அப்பகுதியில் உப்பு உற்பத்தி செய்ய லாயக்காக இன்னும் நூற்றுக் கணக்கான ஏக்கர் நிலமிருக்கிறது. சர்க்காருக்குச் சொந்தமான அந்நிலத்தில் வேலையிழந்திருக்கும் தொழிலாளர்களுக்கு தனியாக உப்பு உற்பத்தி செய்து ஜீவிப்பதற்கு வசதியாக ஜாரி செய்து கொடுப்பது மிகவும் உதவியாக இருக்கும். அப்பகுதியில் உப்பு விலை மந்தம் காரணமாக ஏற்பட்டிருக்கும் உப்புத் தேக்கத்தால் உப்பளங்கள் பல வேலை துவங்காததால் ஏற்பட்டிருக்கும் கஷ்ட நிலைமையும் சேர்ந்திருக்கிறது. இப்படிப்பட்ட விஷயங்களில் சர்க்காரின் கவனத்தைத் திருப்ப வேண்டும் என்பதற்காகத் தான் இந்தத் தீர்மானம் என்னால் கொண்டுவரப்பட்டிருக்கிறது.

* THE HON. SRI R. VENKATARAMAN : Sir, the Government of India have granted a licence to Dhrangadhra Chemical Works, Limited, Bombay, under the Industries (Development and Regulation) Act, 1951, to establish a new industrial undertaking in the Tirunelveli district for the manufacture of caustic soda and soda ash. The Government have taken shares in the company to the extent of Rs. 10 lakhs. The company requested the Government to acquire an extent of 1,610·80 acres of private lands in Punnakayal, Athoor Casba, Sendamangalam and Kayalpatnam North villages of the Tiruchendur taluk required for the establishment

18th March 1959] [Sri R. Venkataraman]

of the Industrial undertakings for the construction of quarters for the staff, etc. An extent of 1,382·55 acres of land has already been acquired and handed over to the company. The company also requested the Government to lease out an extent of 978·38 acres of Government lands for the above purpose. The Board of Revenue has been instructed to permit the company to enter upon the lands pending finalisation of the proposal to lease out the lands so that the company could start construction of the factory. The landowners whose lands have been acquired were given compensation at the rate of Rs. 1,000 per acre for the lands acquired. The persons who encroached upon the Government lands and were manufacturing salt without the permission of the Government should necessarily have to be evicted before the lands could be granted to the company. The number of such persons who were evicted is only 138. Normally they are not entitled to any compensation as the encroachment was made without the permission of the Government. However, considering the special circumstances of the case, the Government have issued orders for the grant of an ex-gratia compensation at the rate of Rs. 300 per acre on the basis of half-grant and half-loan to enable the encroachers to rehabilitate themselves elsewhere.

The company has begun construction of the factory and the installation of the machinery. It is learnt that the plant will be put into commission shortly and that the production will start by the end of April 1959. The company has already assured the Collector of Tirunelveli that such of the affected salt workers who satisfy their requirements would be preferred for employment in the factory to outsiders. When the factory starts production, most of the salt workers who have lost their livelihood by the acquisition of private lands and the leasing of Government lands, will, no doubt, be absorbed in the factory. The dislocation is only transitory and it cannot be helped especially when a very big soda ash and caustic soda factory is to be established in this part of the country.



## IV.—GOVERNMENT MOTION.

### ELECTION OF MEMBERS TO THE COMMITTEE ON ESTIMATES FOR THE FINANCIAL YEAR 1959–60.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I beg to move—

"That, with reference to rule 163 of the Madras Assembly Rules, this Assembly do proceed, on a date to be fixed by the Hon. the Speaker to elect fourteen members to be members of the Committee on Estimates for the financial year 1959–60."

The motion was put and carried.

MR. SPEAKER : In accordance with the regulations framed by me for the holding of elections according to the principle of proportional representation by means of the single transferable